# இறைநேசர்களிடம் உதவி தேடுதல் - குர்ஆன், ஹதீஸ் ஒளியில் ஓர் ஆய்வு

ஆக்கம்
இஸ்லாமிய கல்வி மையம்
கூத்தாநல்லூர்

அனைத்துப்புகழும் அகிலங்கள் எல்லாவற்றையும் படைத்து வளர்த்துப் பரிபக்குவப்படுத்தும் (நாயனான) அல்லாஹ்வுக்கே ஆகும். அவனது சாந்தியும், சமாதானமும் அவனுடைய தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும், மற்றும் அனைத்து முஸ்லிம்கள் மீதும் உண்டாவதாக! ஆமீன்!!

பொதுவாக இறைவனோடு மற்றவர்களையும் அதாவது பெரியார்களையும், ஷெய்குமார்களையும், பீர்களையும், அவ்லியாக்களையும், இறை நேசர்களையும் பிரார்த்திப்பவர்கள் பின்வரும் காரணங்களில் சிலவற்றையோ அல்லது ஏதேனும் ஒரு காரணத்தையோ கூறுவர்.

1. நீதிபதியிடம் வாதாடுவதற்காக ஒரு வக்கீல் தேவையல்லவா? அதுபோல் நாங்கள் அவ்லியாக்களிடம் அல்லாஹ்விடம் வாதாடுவதற்காக முறையிடுகிறோம்.

2. நாங்கள் கேட்பதெல்லாம் கிடைக்கிறது. அதனால் தான் தொடர்ந்து கேட்கிறோம்.

3. நாங்கள் பாவம் செய்த பாவிகளாக இருக்கின்றோம். அதனால் பாவமே செய்யாத இறைவனுக்கு நெருக்கமான நல்லடியார்கள் எங்களுக்காக அவனிடம் எங்களின் தேவைகளைக் கேட்டு பெற்றுத் தருவார்கள்.

4. மார்க்கத்தில் சிறிதளவு விபரமுள்ள இன்னும் சிலர் நாங்கள் அவ்லியாக்களிடம் நேரடியாகப் பிரார்த்திக்கவில்லை; மாறாக இறைவனிடமே அந்த அவ்லியாக்களின் பொருட்டால் எங்கள் தேவைகளை நிறைவேற்றித் தருமாறு வேண்டுகிறோம் என்கின்றனர்.

5. நாங்கள் ஒன்றும் புதிதாக இதைச் செய்யவில்லை. எங்கள் முன்னோர்களும், மூதாதையர்களும் அவ்லியாக்களிடம் முறையிட்டுத்தானே தேவைகளைப் பெற்று வந்தார்கள்.அவர்கள் என்ன ஒன்றும் விளங்காதவர்களா?

6. எங்கள் ஆலிம்களும் மற்றும் ஹஜ்ரத்மார்களும் இதைச் செய்கிறார்களே, அவர்களும் தவறு செய்கிறார்களா?

அல்லாஹ் தன் திருமறையில் அவன் ஒருவனையே வணங்க வேண்டும் என்றும், அவனிடமே உதவி தேட வேண்டும் என்றும் பல இடங்களில் வலியுறுத்திக் கூறியிருக்க கப்று வணக்க முறைகளை ஆதரிப்போர் எடுத்து வைக்கும் மேற்கூறப்பட்ட வாதங்களை குர்ஆன் மற்றும் ஹதீஸின் அடிப்படையில் ஆராய்வோம்.

## 1. இறைவனுக்கு உவமை மனிதர்களில் உள்ள நீதிபதியா ?

இறைநேசர்களிடம் கையேந்தி நிற்கும் முஸ்லிம்களில் சிலர் அவர்களுடைய அறியாமையினால், 'நீதிபதியிடம் வாதாடுவதற்கு நமக்கு ஒரு வக்கீல் தேவையல்லவா? அல்லது ஒரு பெரிய அமைச்சரிடம் நமது தேவையை கேட்டுப் பெறுவதற்கு அவருக்கு நெருக்கமானவரை பரிந்துரை செய்வதற்காக நியமிப்பதில்லையா? அதுபோல் தான் நாங்களும் இறைவனிடம் எங்களுக்காக வாதாடி, கேட்டுப் பெறுவதற்காக இறைவனுக்கு நெருக்கமான இறைநேசர்கள் மூலம் வேண்டுகிறோம்' என்று கூறுகின்றனர். இவ்வாறு கூறுவது இஸ்லாத்தைப் பற்றி அவர்கள் ஓரளவுக்குக் கூட அறியாமல் இருப்பதே

காரணமாகும். நீதிபதி நாம் குற்றம் செய்தவர்களா அல்லது நிரபராதியா என்பதை நமக்காக வாதாடும் வக்கீல் எடுத்து வைக்கும் சாட்சியங்களை வைத்தே அறிந்து கொள்வார். அதுவும் சாட்சியங்கள் சரிவர நிரூபிக்கப்படாவிட்டால் நிரபராதிக்குக் கூட தண்டனையளிக்கும் எத்தனையோ நீதிபதிகள் இருக்கிறார்கள். மேலும், குற்றவாளி விடுதலை பெறுவதையும் காண்கிறோம்.

இது இப்படியிருக்க அகிலங்களையெல்லாம் படைத்து பரிபக்குவப்படுத்தி பாதுகாத்துக் கொண்டிருக்கும் அல்லாஹ்வுக்கு நமது தேவைகள் என்ன என்பது தெரியாதா? இதயங்களில் உள்ள இரகசியங்களை அறிபவனாக அல்லாஹ் இருக்கிறான் என்று தன்னுடைய திருமறையிலே பல இடங்களில் கூறுகின்றானே!

"வானங்களிலும், பூமியிலும் உள்ளவற்றை அவன் அறிகிறான்; நீங்கள் இரகசியமாக்கி வைப்பதையும், பகிரங்கமாக்கி வைப்பதையும் அவன் அறிகிறான். மேலும், இருதயங்களில் உள்ளவற்றையெல்லாம் அல்லாஹ் அறிகிறான்" (அல்குர்ஆன்: 64:4). இன்னும் பல வசனங்களில் (11:5, 67:13-14, 2:284, 5:7, 8:43, 21:4, 20:7, 27:65, 59:22) அல்லாஹ் மட்டுமே இருதயங்களில் உள்ள இரகசியங்களை அறிகிறான் என்றும் மற்ற யாரும் அவற்றை அறிய முடியாது என்றும் கூறுகின்றானே! நாம் கூறாமலேயே நம் தேவைகளை அறிந்திருக்கும் இறைவனுக்கு, கேவலம் ஒரு வக்கீலோ அல்லது அதிகாரியோ எடுத்துச் சொன்னாலே தவிர அறிந்து கொள்ள முடியாமல் இருக்கின்ற நீதிபதியையும், அமைச்சரையும் உதாரணங்களாகக் கூறி அல்லாஹ்விற்கு உவமைகளை ஏற்படுத்தி இணைவைத்த மாபாதகம் ஆகாதா? இவ்வாறு இறைவனுக்கு உவமைகளைக் கூறுபவர்களை அல்லாஹ் கடுமையாக எச்சரிக்கின்றான்: "ஆகவே நீங்கள் அல்லாஹ்வுக்கு உதாரணங்களைக் கூறாதீர்கள்; நிச்சயமாக அல்லாஹ்தான் (யாவற்றையும் நன்கு) அறிபவன்; ஆனால் நீங்கள் அறியமாட்டீர்கள்" (அல்குர்ஆன்: 16:74)

ஆகவே அல்லாஹ்வுக்கு உதாரணங்களைக் கூறுவது இந்த திருமறை வசனத்தை மீறிய மாபெரும் குற்றமாகாதா? சிந்தியுங்கள் சகோதர சகோதரிகளே! அல்லாஹ் தன் திருமறையில் அல்லாஹ்வையே அழையுங்கள் என்றும், அவன் பிரார்த்தனைப் புரிபவர்களின் பிரார்த்தனையைச் செவியேற்கிறான் என்றும் ஆனால், உங்களால் அழைக்கப்படுபவர்களால் பதிலளிக்க முடியாது என்று பல இடங்களில் வலியுறுத்திக் கூறுகின்றான்.

"நிச்சயமாக அல்லாஹ்வையன்றி எவர்களை நீங்கள் அழைக்கின்றீர்களோ, அவர்களும் உங்களைப் போன்ற அடிமைகளே; நீங்கள் உண்மையாளர்களாக இருந்தால் நீங்கள் அவர்களை அழைத்துப் பாருங்கள் - அவர்கள் உங்களுக்கு பதில் அளிக்கட்டும்!" (அல்குர்ஆன்: 7:194)

## 2. நாங்கள் கேட்பதெல்லாம் கிடைக்கிறது.

இது அறியாமையினால் கூறப்படும் அர்த்தமற்ற வாதமாகும். இதுபோல் கேட்பது புதிதல்ல. ஸஹாபா பெருமக்கள் காலத்திலேயே இவ்வாறு கேட்கப்பட்டு அதற்கான பதிலும் கிடைத்து விட்டது. கீழ்கண்ட ஹதீஸை கவனியுங்கள்:

*'ஒருமுறை (எனது கணவர்) அப்துல்லாஹ் பின் மஸ்வூத் (ரலி) அவர்கள் எனது கழுத்தில் கருப்பு நூல் கயிற்றைக் கண்டு இது என்ன? என்று கேட்டார்கள். அதற்கு நான் இது எனக்காக மந்திரிக்கப்பட்ட கயிறு என்றேன். உடனே அவர்கள் அதைப் பிடித்து அறுத்து விட்டு நீங்களோ (நபித் தோழராகிய) அப்துல்லாஹ்வின் குடும்பத்தார். ஷிர்க்கை விட்டும் மிக அதிகமாக ஒதுங்கியவர்கள். 'நிச்சயமாக மந்திரித்தல், கஷ்ட நிவர்த்திக்காக கழுத்தில் மணியைக் கோர்த்துக் கட்டுதல், கணவன், மனைவிக்கிடையே நட்பு நீடிப்பதற்காக மந்திர வேலை செய்தல் ஆகியவை ஷிர்க்கின்பால் சேர்க்கக் கூடியவையாகும்' என நபி (ஸல்)*

*அவர்கள் கூறக் கேட்டிருக்கிறேன் என்றார்கள். அப்போது நான் நீங்கள் என்ன இவ்வாறு கூறுகிறீர்கள்? எனது கண்ணில் வலி ஏற்பட்டு கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது. நான் ஒரு யூதரிடம் சென்று அதற்காக அவர் மந்திரித்த போது நீர் வடிதல் நின்று விட்டதே! என்றேன். அவர்கள் இது ஷைத்தானுடைய வேலையாகும். அவன் தனது கையால் கண்களை இடித்துக் கொண்டிருக்கிறான். மந்திரிக்கும் போது அகன்று கொள்கிறான். நீர் இதற்காக நபி (ஸல்) அவர்கள் ஓதியது போன்று ஓதினாலே போதும் என்றார்கள்'* அறிவிப்பாளர்: ஜைனப் (ரலி) நூல்: அபூதாவூத் (3385), இப்னுமாஜா (3521), அஹ்மத் (3433).

நாம் பிற சமுதாயத்து மக்களிடம் அவர்கள் குலதெய்வம் என்று ஒவ்வொரு வீட்டுக்கும் ஒரு தெய்வத்தை வழிபடுவதைக் காணலாம். அவர்கள் கூறும் காரணம் என்னவென்றால், எங்கள் குலதெய்வம் சக்தி வாய்ந்தது. அது நாங்கள் கேட்பதையெல்லம் கொடுக்கிறது. அதனால்தான் நாங்கள் அதை தொடர்ந்து வழிபடுகிறோம் எனக்கூறுவர். இன்னும் சிலர் அத்தெய்வங்களுக்கு நன்றி செலுத்தும் முகமாக அத்தெய்வங்களின் உண்டியலில் கோடிக்கணக்கில் காணிக்கைகளைச் செலுத்துவர். அவர்கள் கூறுவது போன்று அவர்கள் வேண்டிக் கொண்டவைகளில் சில நடைபெறுவதாக தோன்றுவதால் தான் அவர்கள் அந்த நம்பிக்கையில் உறுதியாக இருக்கின்றனர். இதைப்போலவே நம் சமுதாயத்து மக்களில் சிலர் அவரவர் நம்பிக்கைகளுக்கு ஏற்ப பிடித்தமான அவ்லியாக்களை எடுத்துக் கொண்டு அவர்களை தங்களின் குல அவ்லியாவாக? ஆக்கி வைத்துக் கொள்கின்றனர். பிற சமுதாயத்தவர் கூறுவதைப்போல இந்த அவ்லியாக்களும் எங்களின் தேவைகளையெல்லாம் நிறைவேற்றித் தருகின்றனர் எனக் கூறுகின்றனர். நிச்சயமாக இவைகள் எல்லாம் ஷைத்தானின் தீய சூழ்ச்சிகளாகும். அந்த அவ்லியாக்களிடம் நேர்ச்சை செய்தால் நிறைவேறுவதாக தோன்றுவது போல, பிற சமுதாயத்து வழிபாட்டுத் தலங்களிலும் நேர்ச்சை செய்தாலும் தான் அவர்களுக்கு சில நாட்டங்கள் நிறைவேறுவதாக தோன்றுகின்றன. அதற்காக அங்கேயும் செல்வார்களா?

அல்குர்ஆன் (18:39) வசனத்தில் அல்லாஹ் கூறுகிறான்: "....அல்லாஹ் நாடியதே நடக்கும். அனைத்து சக்தியும் அல்லாஹ்வுக்கேயன்றி வேறில்லை...." நமக்கு நடக்கும் நல்லவைகளும் கெட்டவைகளும் அல்லாஹ்வின் நாட்டபடியே நடக்கின்றன என்று நாம் நம்பிக்கை கொள்வோமானால் இணைவைக்கும் இதுபோன்ற செயல்களிலிருந்து அல்லாஹ் நம்மைக் காப்பாற்றுவான்.

## 3. வரம்பு மீறிய பாவிகளையும் மன்னிப்பவன் அல்லாஹ்வே!

நாங்கள் பாவங்கள் செய்த பாவிகள். ஆகவே எங்களின் பிரார்த்தனைகள் அல்லாஹ் ஏற்றுக் கொள்ளமாட்டான். எனவே பாவங்களே செய்யாத இறை நேசசெல்வர்களிடம் எங்களின் தேவைகளைக் கூறினால் அவர்கள் எங்களுக்காக இறைவனிடம் பரிந்துரைத்து எங்களின் தேவைகளைப் பெற்றுத் தருவார்கள் என சிலர் கூறுகின்றனர். நாம் பாவங்கள் நிறையச் செய்தவர்களாக இருக்கிறோம் என்பது உண்மைதான். ஆனால் அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால் என்று ஒவ்வொரு செயலின் துவக்கத்திலும் கூறிடும் நாம் அதன் பொருளை புரிந்து கொள்வதில்லை. அல்லாஹ் மிகப்பெரும் கருணையுடையவனாகவும், மன்னிப்பவனாகவும் இருக்கிறான் என்று திருமறையின் பல இடங்களில் கூறுகின்றான்.

"என் அடியார்களே! (உங்களில்) எவரும் வரம்பு மீறி தமக்குத்தாமே தீங்கிழைத்துக் கொண்டபோதிலும், அல்லாஹ்வுடைய ரஹ்மத்தில் அவர் நம்பிக்கை இழக்க வேண்டாம் - நிச்சயமாக அல்லாஹ் பாவங்கள் யாவையும் மன்னிப்பான் - நிச்சயமாக அவன் மிக்க மன்னிப்பவன்; மிக்கக் கருணையுடையவன் (என்று நான் கூறியதை நபியே!) நீர் கூறுவீராக" (அல்குர்ஆன்: 39:53)

மேற்கண்ட வசனத்தில் ஒருவர் எவ்வளவுதான் பாவங்கள் செய்திருப்பினும், அவர்

அல்லாஹ்வுக்கே முற்றிலும் வழிபட்டு தம் பாவங்களுக்காக வருந்தி மன்னிப்பு கேட்டால் அல்லாஹ் அவற்றை மன்னிப்பதாகக் கூறுகின்றான். ஆனால் பாவம் செய்தவருடைய பிரார்த்தனையை அல்லாஹ் ஏற்றுக் கொள்ளமாட்டான் என்று கூறுவது மேற்கண்ட வசனத்தை நிராகரித்தல் ஆகாதா? சிந்தியுங்கள் சகோதர சகோதரிகளே!

ஒருவர் உயிருடன் இருக்கும் வரையில்தான் அவரால் பார்க்கவும், கேட்கவும், அமல் செய்யவும், பிரார்த்திக்கவும் முடியும். அவர் இறந்து விட்டால் அவரால் எந்த அமல்களையும் செய்யமுடியாது. அவருக்கும் இந்த உலகத்திற்கும் எவ்வித தொடர்பும் இருக்காது. இதை திருமறை வசனங்களும், ஹதீதுகளும் உறுதி செய்கின்றன. எனவே அமல்களில் ஒன்றாகிய பிரார்த்தனையை நமக்காக இறைவனிடம் என்றோ இறந்துவிட்ட நல்லடியார்கள் செய்கின்றார்கள் என்றால் அது பின்வரும் குர்ஆன், ஹதீதுகளுக்கு முற்றிலும் எதிரான கருத்தாகும்.

➔ அவர்கள் இறந்தவர்களே உயிருள்ளவர்கள் அல்லர்:-

"அல்லாஹ்வையன்றி வேறு எவர்களை அவர்கள் பிரார்த்திக்கிறார்களோ, அவர்கள் எந்த பொருளையும் படைக்க மாட்டார்கள்; அவர்(களால் பிரார்த்திக்கப்படுபவர்)களும் படைக்கப் பட்டவர்களாவார்கள். அவர்கள் இறந்தவர்களே உயிருள்ளவர்களல்லர்; மேலும், எப்பொழுது எழுப்பப்படுவார்கள் என்பதையும் அவர்கள் அறியமாட்டார்கள்" (அல்குர்ஆன்: 16:20-21)

➔ இறந்த நல்லடியார்களுக்கும் இவ்வுலகத்தில் இருப்பவர்களுக்கும் இடையில் ஒரு திரையிருப்பதாக அல்லாஹ் கூறுகின்றான்:-

"அல்லாஹ், உயிர்களை அவை மரணிக்கும் போதும், மரணிக்காதவற்றை அவற்றின் நித்திரையிலும் கைப்பற்றி, பின்பு எதன் மீது மரணத்தை விதித்து விட்டானோ அதை(த் தன்னிடத்தில்) நிறுத்திக் கொள்கிறான்" (அல்குர்ஆன்: 39:42)

"....அவர்கள் எழுப்பப்படும் நாள்வரையும் அவர்கள் முன்னே ஒரு திரையிருக்கிறது" (அல்குர்ஆன்: 23:99-100)

➔ இறந்த நல்லடியார்களால் நாம் கூறுவதைக் கேட்க முடியாது என்று அல்லாஹ் கூறுகின்றான்:-

"....நிச்சயமாக நீர் மரித்தோரைக் கேட்கும்படிச் செய்ய முடியாது...." (அல்குர்ஆன்: 27:79-81)

"....அன்றியும் உயிருள்ளவர்களும், இறந்தவர்களும் சமமாக மாட்டார்கள். நிச்சயமாக அல்லாஹ் தான் நாடியவர்களைச் செவியேற்கும்படிச் செய்கிறான். கப்றுகளில் உள்ளவர்களைக் கேட்கும்படிச் செய்பவராக நீர் இல்லை. நீர் அச்சமூட்டி எச்சரிப்பவரேயன்றி வேறு அல்லர்" (அல்குர்ஆன்: 35:22-23)

"நீங்கள் அவர்களை பிரார்த்தி(த்து அழை)த்தாலும், அவர்கள் உங்கள் பிரார்த்தனையை (அழைப்பை)ச் செவியேற்க மாட்டார்; செவியேற்றாலும் கூட உங்களுக்கு பதில் அளிக்கமாட்டார்கள்; கியாம நாளில் நீங்கள் இணை வைத்ததையும் அவர்கள் நிராகரித்து விடுவார்கள். யாவற்றையும் நன்கு அறிபவனைப் போன்று (அவர்கள்) எவருமே உங்களுக்கு அறிவிக்க மாட்டார்கள்" (அல்குர்ஆன்: 35:14)

"அவனையன்றி நீங்கள் யாரைப் பிரார்த்திக்கிறீர்களோ அவர்கள் உங்களுக்கு உதவி செய்யவும், தங்களுக்கு தாங்களே உதவி செய்து கொள்ளவும் சக்தி பெற மாட்டார்கள்" (அல்குர்ஆன்: 7:197)

இங்கு 'என் அடியார்கள்' என்று அல்லாஹ் குறிப்பிடுவதில் சாதாரண மக்களும் நல்லடியார்களான இறைநேசர்களும் அடங்குவர். அவர்களைக்கூட கஷ்டம், துன்பம், துயரம், வியாதி போன்றவற்றிலிருந்து நம்மை காப்பவர்களாக நினைக்கக்கூடாது. (மேற்கண்ட வசனம் காஃபிர்களை நோக்கி கூறப்பட்டவையாக இருப்பினும் இதில் முஸ்லிம்களுக்கும் படிப்பினை இருக்கிறது.) அதற்கு அந்த நல்லடியார்கள் சக்தி பெற்றவர்களும் அல்ல என்று இரைவன் எச்சரிக்கின்றான். இறைவனே சக்தி பெற்றவன், மேலான பாதுகாவலன் என்பதற்கு சான்றாக இறைவன் தன் அருள்மறையின் மற்றொரு வசனத்தில் ஏனைய இறைநேசர்களை விடவும் மிக உயர்ந்தவர்களான நபி (ஸல்) அவர்களை நோக்கி அல்லாஹ் கூறுகிறான்:

"கூறுவீராக: நிச்சயமாக நான் உங்களுக்கு நன்மையோ, தீமையோ செய்ய சக்தி பெற மாட்டேன்" (அல்குர்ஆன்:72:21)

"(நபியே!) நீர் கூறும்: அல்லாஹ் நாடினாலன்றி நான் எனக்கே யாதொரு நன்மையோ அல்லது தீமையோ செய்து கொள்ள சக்தியில்லாதவன்; மறைந்திருப்பவற்றை நான் அறிபவனாக இருந்தால் நன்மைகளையே அதிகமாகத் தேடிக் கொண்டிருப்பேன்; (அந்நிலையில் எவ்விதமான) தீங்கும் என்னைத் தீண்டியிராது - நம்பிக்கை கொள்ளும் மக்களுக்கு நான் அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவனும், நன்மாராயம் கூறுபவனுமேயன்றி வேறில்லை" (அல்குர்ஆன்: 7:188)

- ➔ நல்லடியார்களைப் பாதுகாவலர்களாக எடுத்துக் கொள்ளக்கூடாது என்று அல்லாஹ் கூறுகிறான்:-

"நிராகரிப்பவர்கள் என்னையன்றி என் அடியார்களை(த் தம்) பாதுகாவலர்களாக எடுத்துக் கொள்ளலாம் என்று எண்ணுகிறார்களா? நிச்சயமாக இக்காஃபிர்கள் (விருந்துக்கு) இறங்குமிடமாக நரகத்தையே சித்தப்படுத்தி வைத்திருக்கின்றோம்" (அல்குர்ஆன்: 18:102)

- ➔ நல்லடியார்களால் பரிந்து பேச முடியாது என்று அல்லாஹ் கூறுகின்றான்:-

"....அவனையன்றி உங்களுக்கு உதவியாளரோ, பரிந்து பேசுபவரோ இல்லை. எனவே (இவற்றையெல்லாம்) நீங்கள் (நினைத்து) சிந்திக்க வேண்டாமா?" (அல்குர்ஆன்: 32:4)

"அவர்கள் அல்லாஹ் அல்லாதவற்றை(த் தங்களுக்குப்) பரிந்து பேசுபவர்களாக எடுத்துக் கொண்டார்களா? (நபியே!) கூறுவீராக! 'அவை எந்த சக்தியையும், அறிவையும் பெறாமல் இருந்த போதிலுமா?' (என்று)" (அல்குர்ஆன்: 39:43)

- ➔ நல்லடியார்கள் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறார்கள். அவர்களால் நம் அழைப்பைச் செவியுற முடியாது:-

நபி (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்:-

*'உங்களில் யாரேனும் மரணித்து விட்டால் காலையிலும், மாலையிலும் அவருக்குரிய இடம் அவருக்கு எடுத்துக் காட்டப்படும். சுவர்க்கவாசியாக இருந்தால் சுவர்க்கத்திலுள்ள அவரது இடம் அவருக்குக் காட்டப்படும். நரகவாசியாக இருந்தால் நரகத்திலுள்ள அவரது இடம் அவருக்குக் காட்டப்படும். கியாமத்து நாளில் அல்லாஹ் உன்னை எழுப்பும்வரை இதுதான் உனது தங்குமிடம் என்று அவரிடம் கூறப்படும்'* அறிவிப்பாளர்: இப்னு உமர் (ரலி) நூல்: புகாரி, முஸ்லிம்.

*'நல்ல மனிதராக இருந்தால், நான் எனது குடும்பத்தாரிடம் சென்று இந்த விபரங்களைக்*

*கூறிவிட்டு வருகிறேன் என்று அந்த மனிதர் கூறுவார். அதற்கு அவ்வானவர்கள், 'இந்த இடத்திலிருந்து உன்னை இறைவன் எழுப்பும்வரை உறங்குவீராக' என்று கூறுவார்கள்.... தீய மனிதராக இருந்தால் அவனது இடத்திலிருந்து இறைவன் அவனை எழுப்பும்வரை வேதனை செய்யப்பட்டுக் கொண்டே இருப்பான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியிருக்கின்றார்கள்'* அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி) நூல்: திர்மிதி ஹதீஸ் சுருக்கம்.

என் குடும்பத்தாரிடம் போய் நல்லுபதேசம் செய்துவிட்டு வருகிறேன் என்று அந்த நல்லவர் வானவர்களிடம் அனுமதி கேட்கும்போது அனுமதி மறுக்கப்படுகிறது. அப்படியிருக்க அந்த ஆத்மா பர்ஸக் உலகிலிருந்து இவ்வுலகிற்கு வர வானவர்கள் அனுமதிப்பார்களா? எனவே அல்லாஹ்வின் கட்டுப்பாட்டில் மரணித்த நல்லடியார்களின் ஆத்மா இருக்கும்போது, நல்லடியார்கள் அவர்களது கப்றுகளில் இருந்து கொண்டே வெளியில் உயிருடன் இருப்பவர்கள் தம் மனதிற்குள் கேட்கும் தேவைகளை அறிந்து அவற்றை நிறைவேற்றித் தருகிறார்கள் அல்லது அவர்களுக்காக இறைவனிடம் பரிந்து பேசுகின்றார்கள் என்று நம்புகின்றவர்கள் மேற்கண்ட ஹதீஸை நிராகரித்தவர் ஆவார்.

- ➔ நல்லடியார்கள் அல்லாஹ்விடம் சிபாரிசு செய்வார்கள் எனக் கூறுபவர்களுக்கு அல்லாஹ் கூறுகின்றான்:-

"அறிந்து கொள்வீராக! களங்கமற்ற மார்க்க (வழிபாடு யாவு)ம் அல்லாஹ்வுக்கே உரியது; இன்னும், அவனையன்றிப் பாதுகாவலர்களை எடுத்துக் கொண்டிருப்பவர்கள், 'அவர்கள் எங்களை அல்லாஹ்வின் அருகே சமீபமாகக் கொண்டு செல்வார்கள் என்பதற்காகவேயன்றி நாங்கள் அவர்களை வணங்கவில்லை' (என்கின்றனர்)" (அல்குர்ஆன்: 39:3)

இங்கே சிலர் கூறலாம், நாங்கள் அவர்களை வணங்கவில்லையே, அந்த நல்லடியார்களிடம் 'இறைவனிடம் எங்களின் கோரிக்கைகளைப் பெற்றுத் தாருங்கள் என்று தானே பிரார்த்திக்கிறோம்' இந்த வசனம் எப்படி எங்களுக்குப் பொருந்தும்? என்று கேட்கலாம். நபி (ஸல்) அவர்கள் *'பிரார்த்தனையும் ஒரு வணக்கமாகும்'* என்று கூறியிருக்கிறார்கள். அறிவிப்பாளர்: நுஃமான் இப்னு பஷீர் (ரலி) நூல்: அபூதாவூத்.

அல்லாஹ்வும் தன்னுடைய திருமறையிலே பல்வேறு இடங்களில் தன்னைத்தவிர வேறு யாரிடமும் பிரார்த்திக்கக் கூடாது என்று கூறுவதன் மூலம் பிரார்த்தனையும் ஒரு வணக்கம் என்றே கூறுகின்றான்.

இதுபோன்ற இன்னும் ஏராளமான வசனங்களில் (பார்க்க: 6:71, 7:192, 10:106-107, 17:56-57, 26:62, 34:22) இருந்து நாம் விளங்குவது என்னவென்றால்:-

- *இறந்தவர்களால் சிபாரிசு, பரிந்துரை செய்ய முடியாது (10:18)*
- *இறந்த நல்லடியார்கள் புது மணமகனைப் போல் உறங்கிக் கொண்டிருக்கின்றனர். (ஹதீஸ்)*
- நல்லடியார்களைப் பாதுகாப்பவனாக அல்லாஹ்வே இருக்கிறான். அவர்கள் பாதுகாவலர்கள் அல்லர். (7:196)
- இறந்த நல்லடியார்களால் பதிலளிக்க முடியாது. (17:56)
- அவர்களுக்கு அணுவளவு அதிகாரமும் இல்லை. (35:13)
- அல்லாஹ் அல்லாதவர்களை அழைக்கக் கூடாது. (10:106, 6:71, 23:117)

- அல்லாஹ்வின் இல்லங்களில் நல்லடியார்களை அழைக்கக் கூடாது. (72:18)

எனவே என்றோ இறந்து விட்ட நல்லடியார்கள் பிரார்த்தித்தால் அது இறைவனால் அங்கீகரிக்கப்படும் என்று ஒருவர் நம்பி, அந்த நல்லடியாரின் கப்றில் கையேந்தி நின்றால் நிச்சயமாக அவர் மேற்கூறப்பட்ட இறைவசனங்களை நிராகரித்ததோடல்லாமல் இறைவனுக்கு இணைவைத்த மகா பாவியாகி விடுவார். அல்லாஹ் நம் அனைவரையும் காப்பாற்றுவானாக!

### 4. ஷுஹதாக்கள் என்றும் உயிர் வாழும் தியாகிகளாயிற்றே!

இன்னும் சிலர் மேற்கண்ட வசனங்கள் எல்லாம் சாதாரண மக்களைக் குறிக்கின்றது. ஆனால், 'இன்னும் அல்லாஹ்வின் பாதையில் கொல்லப்பட்டோரை '(அவர்கள்) மரணித்து விட்டவர்கள்' என்று கூறாதீர்கள். அப்படியல்ல! அவர்கள் உயிருள்ளவர்கள். எனினும் நீங்கள் (இதை) உணர்ந்து கொள்ள மாட்டீர்கள்" (அல்குர்ஆன்: 2:154 மற்றும் 3:169) இவ்வசனங்கள் அல்லாஹ்வின் பாதையில் உயிர் நீத்த ஷுஹதாக்கள் உயிரோடு இருப்பதாக கூறுகிறதே! அப்படியானால் இவ்வசனத்தின் பொருள் என்ன என்று கேட்கின்றனர்.

இவ்வசனங்களுக்கு அப்துல்லாஹ் பின் மஸ்வூத் (ரலி) அவர்கள் அளித்த விளக்கமாக 'ஸஹீஹ் முஸ்லிமில்' பின்வரும் ஹதீஸ் அறிவிக்கப்படுகிறது.

*'மஸ்ரூக் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: இவ்வசனம் குறித்து அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் (ரலி) அவர்களிடம் வினவினோம். அதற்கு அவர்கள் கூறினார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் இதுபற்றி நாங்கள் கேட்டோம். அப்போது நபி (ஸல்) அவர்கள் பின்வருமாறு விளக்கினார்கள்.*

*'அவர்களின் உயிர்கள் பச்சை நிறப் பறவைகளின் உடலுக்குள் இருக்கும் அவைகள் அர்ஷில் மாட்டப்பட்டுள்ள கண்ணாடி கூண்டுகளுக்குள் இருக்கும். சுவர்க்கத்தில் அவை நினைத்தபடி சுற்றித்திரிந்து விட்டு அந்த கூண்டுக்குள் வந்து சேரும். அவற்றைப் பார்த்து உங்களுக்கு என்ன வேண்டும்? என்று இறைவன் கேட்பான். இனி எங்களுக்கு என்ன தேவையிருக்கிறது? நாங்களோ சுவர்க்கத்தில் விரும்பிய இடங்களிலெல்லாம் கனிவகைகளை உண்டு வருகிறோம் என்று அவர்கள் கூறுவர். இவ்வாறு இறைவன் அவர்களிடம் மூன்று முறை கேட்பான். தாங்கள் ஏதாவது ஒன்றைள கேட்காமல் விடப்படமாட்டோம் என்பதை உணர்ந்து கொள்ளும் அவர்கள், 'இறைவா எங்கள் உயிர்கள் எங்கள் உடல்களில் மீட்கப்பட வேண்டும். மீண்டும் ஒருமுறை உன்னுடைய பாதையில் நாங்கள் உயிர் நீக்க வேண்டும் என்று கூறுவர். அவர்களுக்கு வேறு எந்த தேவையும் கிடையாது என்பதைக் காணும் இறைவன் அவர்களை (வேறொன்றும் கேட்காமல்) விட்டுவிடுவான்'* ஸஹீஹ் முஸ்லிம் ஹதீஸ் எண்: 4651.

இதுதான் இந்த ஆயத்துக்களின் விளக்கம். ஆனால் நம்மில் சிலர், ஷஹீதுகள் கப்றின் உள்ளே உயிரோடு இருக்கிறார்கள்; அவர்களிடம் நம் தேவைகளைக் கூறினால் அவர்கள் அதைச் செவியுற்று, அத்தேவைகளை நிறைவேற்றி வைக்கிறார்கள் என்றோ அல்லது அவர்கள் இறைவனிடம் சிபாரிசு (பிரார்த்தனை) செய்கிறார்கள் என்று எண்ணுவதோ தவறு.

மறைந்த நல்லடியார்களால் நமக்காக இறைவனிடம் சிபாரிசு (பிரார்த்தனை) செய்ய முடியுமானால், அந்த நல்லடியார்களை விட இறைவனிடம் மிகவும் அந்தஸ்தில் உயர்ந்தவர்களான நபி (ஸல்) அவர்கள்தான் நமக்காக சிபாரிசு (பிரார்த்தனை) செய்வதற்கு மிகவும் பொருத்தமானவர்கள். அப்படி இருக்க நபி (ஸல்) அவர்கள் நம்மிடையே இல்லாதபோது அவர்களை அழைத்து சிபாரிசு (பிரார்த்தனை) செய்வது ஆகுமென்றிருந்தால், அதை நம்மைவிட நபி (ஸல்) அவர்களின் தோழர்களே மிகவும்

அறிந்திருப்பார்கள் யாராலும் மறுக்க முடியாது. ஆனால் புகாரியில் இடம்பெற்றுள்ள பின்வரும் ஹதீஸை கவனியுங்கள்.

*'வறட்சி ஏற்படும் போதெல்லாம் உமர் (ரலி) அவர்கள் அப்பாஸ் (ரலி) அவர்களை அல்லாஹ்விடம் மழையை வேண்டி பிரார்த்திக்குமாறு கேட்டுக் கொள்வார்கள். மேலும், 'இறைவா! உன்னிடம் மழை வேண்டி பிரார்த்திக்குமாறு நாங்கள் நபி (ஸல்) அவர்களை கேட்டுக் கொள்பவர்களாக இருந்தோம். நீயும் எங்களுக்கு மழையை தந்தருளினாய். (நபி (ஸல்) அவர்கள் எங்களிடையே இல்லாத) இப்பொழுது நபிகளாரின் சிறிய தந்தை அப்பாஸ் (ரலி) அவர்களை உன்னிடத்தில் மழைக்காக பிரார்த்திக்குமாறு கேட்டிருக்கிறோம். 'இறைவா! எங்களுக்கு மழையைத் தந்தருள்' என்று பிரார்த்திப்பார்கள். மழையும் பெறுவார்கள்.* (அறிவிப்பாளர்: அனஸ் (ரலி) நூல்: புகாரி (954, 3434)

மறைந்த இறைநேசர்களிடம் கேட்பது மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டிருந்தால், உமர் (ரலி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் இப்பூவுலகில் வாழ்ந்த காலங்களில் மழைக்காக இறைவனிடம் பிரார்த்திக்குமாறு வேண்டிக்கொண்டது போலவே நபி (ஸல்) அவர்கள் மறைந்த பின்பும் அவர்களிடமே கேட்டிருக்க வேண்டும். அவ்வாறு உமர் (ரலி) அவர்கள் கேட்காமல் தங்களுடன் வாழ்ந்து கொண்டிருந்த அப்பாஸ் (ரலி) அவர்களை இறைவனிடம் பிரார்த்திக்குமாறு கேட்டதிலிருந்து மறைந்தவர்களிடம் (அவர்கள் நபியாக இருந்தாலும்) பிரார்த்திக்குமாறு கேட்பது மார்க்கத்தில் அனுமதிக்கப்படவில்லை என்பது மிகத் தெளிவாக விளங்குகிறது.

இங்கு கவனிக்க வேண்டியது: நம்முடன் உயிரோடு வாழ்ந்து கொண்டிருக்கும் நல்லோர்களிடம் பிரார்த்திக்குமாறு கேட்டுக் கொள்வது நபி (ஸல்) அவர்களின் வழிமுறையிலிருந்தும், நேர்வழி நடந்த கலீஃபாக்களின் நடைமுறையிலிருந்தும் பெறப்பட்ட சுன்னாவாகும்.

### 5. அவ்லியாக்களின் பொருட்டால் தேவைகளைக் கேட்குதல்:-

மார்க்கத்தில் ஓரளவு விபரமுள்ள இன்னும் சிலர் அவ்லியாக்களிடம் நேரடியாக கேட்டுப்பெறுவது தான் பாவம். ஆனால் நாங்கள் அவ்லியாக்களிடம் நேரடியாக பிரார்த்திக்கவில்லை, மாறாக இறைவனிடமே அந்த அவ்லியாக்களின் பொருட்டால் எங்கல் தேவைகலை நிறைவேற்றித் தருமாறு வேண்டுகிறோம் என்கின்றனர். இவ்வாறு கேட்பதற்கு மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டிருந்தால் நம்மைவிட நபி (ஸல்) அவர்களின் தோழர்கள் நன்றாக அறிந்திருப்பார்கள். அதிலும் உமர் (ரலி) அவர்கள் நிச்சயம் அறிந்திருப்பார்கள். அவர்களின் மார்க்க ஞானத்தை எவராலும் குறைவாக எடை போட்டுவிட முடியாது. அத்தகைய உமர் (ரலி) அவர்கள் மேற்கண்ட ஹதீஸில் மழைக்காக நபி (ஸல்) அவர்களின் பொருட்டால் இறைவனிடம் கேட்டிருக்கலாம். ஏனென்றால் அப்பாஸ் (ரலி) அவர்களைவிட நபி (ஸல்) அவர்களே இறைவனிடம் மிக நெருக்கமானவர்கள். அந்தஸ்திலும் உயர்ந்தவர்கள். அவ்வாறு உமர் (ரலி) அவர்கள் கேட்காததிலிருந்து மறைந்தவர்களின் பொருட்டால் கேட்பது மார்க்கத்தில் அனுமதிக்கப்படவில்லை என்பது தெளிவாக விளங்குகிறது. ஒருக்கால் அனுமதிக்கப்பட்டது உமர் (ரலி) அவர்களுக்கு தெரியாமலிருந்தால், இந்த ஹதீஸில் இடம்பெற்றுள்ள அப்பாஸ் (ரலி) அவர்களோ இதை அறிவிக்கும் அனஸ் (ரலி) அவர்களோ உமர் (ரலி) அவர்களுக்கு உணர்த்தியிருப்பார்கள். நம்மைவிட அதிகம் மார்க்கத்தை அறிந்து செயல்பட்ட நபித்தோழர்களான உமர் (ரலி) அப்பாஸ் (ரலி) அனஸ் (ரலி) போன்றவர்கள் அதுபோல் செய்து நமக்கு வழிகாட்டியிருப்பார்கள். அவ்வாறு செய்யாததிலிருந்து அவ்லியாக்களின் பொருட்டால் கேட்பது மார்க்கத்தில் அனுமதிக்கப்படவில்லை என்பது தெள்ளத் தெளிவாகிறது.

*'ஒருநாள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் எங்களுக்கு தொழ வைத்தார்கள். பின்பு எங்களை நோக்கி நீண்ட உரை நிகழ்த்தினார்கள். அப்பொழுது கண்கள் கண்ணீரை*

*சொறிந்தன. இதயங்கள் அச்சத்தால் நடுங்கின. ஒரு மனிதர், அல்லாஹ்வின் தூதரே! இது விடை பெறுபவரது உரையாக அல்லாவா தெரிகிறது. எனவே தாங்கள் எதைக் குறித்து எங்களுக்கு கட்டளையிடுகிறீர்கள் என்று வினவினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ்வுக்கு பயந்து கொள்ளுமாறு உங்களுக்கு கட்டயிடுகிறேன். ஒரு அபிஸீனிய அடிமை உங்களுக்கு தலைமையேற்றால் கூட அவருக்கு செவிமடுங்கள். எனக்கடுத்து நீங்கள் நிறைய கருத்துவேற்றுமைகளை சந்திப்பீர்கள். அப்போது எனது வழிமுறைகளையும், நேர்வழி நடந்த எனது கலீஃபாக்களின் நடைமுறைகளையும் பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள்! புதுமைகளை விட்டொழியுங்கள்! ஒவ்வொரு புதுமையும் பித்அத் ஆகும். ஒவ்வொரு பித்அத்தும் வழிகேடே! என்று கூறினார்கள்'* அறிவிப்பாளர்: இர்பாழ் இப்னு ஸாரியா (ரலி) நூல்: அபூதாவூத் (3991), இப்னுமாஜா (42), அஹ்மத் (16521), தாரமி (95).

மேற்கண்ட ஹதீஸில் தனக்குப்பிறகு பின்பற்றுவதற்கு தகுதியான அபூபக்கர், உமர், உஸ்மான், அலி ரலியல்லாஹு அன்ஹும் ஆகிய நால்வரை குறிப்பிட்டு அவர்களை பின்பற்ற வேண்டும் என வலியுறுத்துகிறது.

மாறாக அவ்லியாக்களின் பொருட்டால் கேட்கலாம், அவ்வாறு கேட்பது மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டுள்ளது என்று கூறுபவர்கள்:

- மேற்கண்ட ஹதீஸை நிராகரிக்கின்றனர்.
- உமர், அப்பாஸ், அனஸ் ரலியல்லாஹு அன்ஹும் போன்ற நபித்தோழர்களுக்கு தெரியாதது தங்களுக்கு தெரிந்து விட்டதாக வாதிடுகின்றனர்.
- அவ்வாறு எண்ணுவதன் மூலம் நபித்தோழர்களை குறைத்து மதிப்பிட முனைகின்றனர். நவூதுபில்லாஹி மின்ஹா. இத்தவற்றை விட்டும் நாம் நீங்கிக் கொள்ள வல்ல அல்லாஹ் அருள்பாலிப்பானாக! ஆமீன்!

### 6. முன்னோர்கள் செய்தது மார்க்கமாகி விடாது:-

ஒரு சிலருக்கு தெளிவு ஏற்பட்டாலும் அவரை ஷைத்தான் இவ்வாறு குழப்புவான். 'தலைமுறை தலைமுறையாக நமது முன்னோர்களும், தாய், தந்தையரும் நல்லடியார்களிடம் பிரார்த்தித்து வந்திருக்கிறார்களே, அவர்கள் செய்தவை அத்தனையும் தவறானவையா? அவர்கள் எல்லோரும் பாவிகளா? அவர்கள் எல்லோரும் நரகத்திற்குத்தான் செல்வார்களா? என்று ஷைத்தான் சிலரின் உள்ளத்தில் முன்னோர்கள் மீது ஒரு மரியாதையை ஏற்படுத்தி, அவர்கள் குர்ஆன் மற்றும் ஹதீதுகள் கூறியவற்றை உதாசீனப்படுத்தி விட்டு, அவர்களின் முன்னோர்களுடைய பாதையை பின்பற்றுமாறு செய்து விடுகிறான். முன்னோர்கள் செய்தது எல்லாம் மார்க்கமாகி விடாது. குர்ஆன், ஹதீஸ் கூறுவதே மார்க்கமாகும். இவ்வாறு முன்னோர்கள் செய்தார்களே, நாமும் செய்தால் என்ன தவறு என்ரு கேட்பவர்களுக்கு அல்லாஹ்வே தன்னுடைய திருமறையில் பதிலளிக்கின்றான்:

"மேலும், அல்லாஹ் இறக்கி வைத்த இ(வ்வேதத்த)தைப் பின்பற்றுங்கள் என்று அவர்களிடம் கூறப்பட்டால், அவர்கள் 'அப்படியல்ல! எங்களுடைய மூதாதையர்கள் எந்த வழியில் (நடக்கக்) கண்டோமோ, அந்த வழியையே நாங்களும் பின்பற்றுகிறோம்' என்று கூறுகிறார்கள். என்ன! அவர்களுடைய மூதாதையரகள், எதையும் விளங்காதவர்களாகவும், நேர்வழி பெறாதவர்களாகவும் இருந்தால் கூடவா?" (அல்குர்ஆன்: 2:170)

இந்த வசனமும் இன்னும் ஏராளமான வசனங்கள், பார்க்கவும்: 7:27-30, 31:21, 37:69-70, 43:22-24, 10:78, 21:52-54, 11:87, 14:10, 11:109, 5:104. போன்ற யாவும் நாம் நமது மூதாதையர்களையோ, தாய், தந்தையரையோ பின்பற்றக்கூடாது என்றும் அல்லாஹ்வின்

திருமறையும், அவனுடைய தூதரின் வழிகாட்டுதலையும் மட்டுமே பின்பற்ற வேண்டும் என்று வலியுறுத்துகின்றது. எனவே எங்களின் முன்னோர்கள் நல்லடியார்களிடம் பிரார்த்தித்தார்கள், அதனால் நாங்களும் அவர்களிடம் பிரார்த்திக்கிறோம் என்று எவரேனும் கூறினால், அது நிச்சயமாக வழிகேடேயாகும். ஏனென்றால் அவர்கள் சென்றுபோன சமுதாயம். அவர்கள் செய்தது பற்றி நீங்கள் வினவப்பட மாட்டீர்கள் என்பது அல்லாஹ்வின் கூற்றாகும்.

மேற்கூறப்பட்ட இறைவசனங்கள் எல்லாம் முஸ்லிம்களான நம்மைக் குறித்து இறக்கப்படவில்லை. மாறாக (காஃபிர்கள்) நிராகரிப்பவர்கள் சம்பந்தப்பட்டது - என்று நினைப்போமேயானால் உண்மைதான். ஆனால், இறைவன் தன் அருள்மறையில் நமக்கு முந்தைய சமூகத்தார்களின் வரலாறுகளையும், அவர்கள் (காஃபிர்களாக) நிராகரித்துக் கொண்டிருந்த காரணத்தினால் அவர்களை அழித்த நிகழ்வுகளையும் கூறுவதோடு அல்லாமல் பின்வருமாறும் கூறுகிறான்.

"இன்னும், நாம் அதனை அக்காலத்தில் உள்ளவர்களுக்கும், அதற்குப் பின் வரக்கூடியவர்களுக்கும் படிப்பினையாகவும் பயபக்தியுடையவர்களுக்கு நல்ல உபதேசமாகவும் ஆக்கினோம்" (அல்குர்ஆன்: 2:66)

நிச்சயமாக அவர்களின் வரலாறுகளில் அறிவுடையோருக்கு (நல்ல) படிப்பினை இருக்கிறது...." (அல்குர்ஆன்: 12:111, இன்னும் பார்க்க: 3:13, 29:43, 43:56, 59:2, 79:26.)

போன்ற வசனங்களின் மூலம் முஸ்லிம்களான நாமும் அதுபோன்ற தவற்றை இழைத்து விடக்கூடாது என்று நம்மை எச்சரிக்கின்றான்! நாம் படிப்பினை பெற வேண்டாமா?

## 7. ஆலிம்கள் செய்வதெல்லாம் ஆகுமானதாகி விடுமா ?

சிலர் இதைப்பற்றி எந்த ஒரு ஆலிமும் எதுவும் கூறியதில்லையே, நீங்கள் தானே புதிதாக கூறுகிறீர்கள்! அவர்களுக்குத் தெரியாததா உங்களுக்குத் தெரிந்து விட்டது? என்று கேட்கின்றனர். இஸ்லாத்தின் அடிப்படையை நன்கு கற்றறிந்த அறிஞர் - ஆலிம் எவரும் இத்தீமைகளுக்கு எதிராகக் குரல் கொடுக்காமல் இருந்ததில்லை. இறைவனுக்கு இணை வைக்கும் மாபாதக செயலாகிய நல்லடியார்களிடம் கையேந்துவதை ஆரம்பக்கால முதற்கொண்டே இறைவனுக்குப் பயந்த மார்க்க அறிஞர்கள் வன்மையாக கண்டித்து வந்திருக்கிறார்கள். இன்றளவும் கண்டித்து வருகிறார்கள். இஸ்லாத்தின் மற்ற சில அம்சங்களில் வேண்டுமானால் ஆலிம்களிடையே கருத்து வேறுபாடு இருக்கலாமே தவிர, ஈமானுக்கு வேட்டு வைக்கும் கப்று வணக்கத்தைப் பற்றிய தெளிவுகளில் குர்ஆன் மற்றும் ஹதீஸ்களை நன்கு கற்றுணர்ந்த அறிஞர்களிடம் எந்த கருத்து வேறுபாடும் இல்லை. அவர்கள் ஒருமித்த குரலாக இத்தீயச் செயல்களை எதிர்க்கவே செய்கின்றனர். ஆனால், கப்று வணக்கமுறைகளை ஆதரிப்போரின் கைகளில் அதிகாரமும், பொருளாதாரமும் இருப்பதால் அவர்கள், கப்று வணக்கமுறைகளுக்கு எதிரான ஆலிம்களின் குரல்கள் மக்களைச் சென்றடையாமல் தடுக்கின்றனர்.

ஆனால் ஆலிம்கள் என்று தங்களைச் சொல்லிக்கொள்ளும் ஒரு சில சொற்பமானவர்களே, கப்று வணங்கிகளிடமிருந்து அற்ப உலக ஆதாயம் பெறும் பொருட்டு, நல்லடியார்களிடம் நேரடியாகக் கேட்டுப்பெறுவதில் எந்தத் தவறும் இல்லை என்று கூறி, நல்லடியார்களின் கப்றுகளில் நடைபெறும் மார்க்கத்திற்கு விரோதமான கூடு, கொடியேற்றம், சந்தனம் பூசுதல், மேளதாளம் போன்ற அனாச்சாரங்களுக்கு ஆதரவு தெரிவிக்கின்றனர். மேலும், இவர்களே முஸ்லிம்களிடையே புரையோடிப்போய் இருக்கும் இஸ்லாத்திற்கு எதிரான அனைத்து வகையான பித்அத்தான காரியங்களுக்கும், மூடப் பழக்கவழக்கங்களுக்கும் ஆதரவு தெரிவித்து தங்களின் வயிற்றைக் கழுவிக் கொள்கின்றனர். இத்தகையவர்கள் குர்ஆன், ஹதீஸை கூறுபவர்களைப் பார்த்து, இவர்களுக்கு என்ன தெரியும்? மார்க்கம் என்பது பெரும்

கடலைப் போன்றது. இவர்கள் வெறும் மொழிப்பெயர்ப்புகளைப் பார்த்து விட்டு உளருகின்றனர் என்கின்றார்கள். நாம் கூறும் குர்ஆன், ஹதீஸ் போதனைகளில் தவறில்லாதபோது இத்தகைய வலுவற்ற வார்த்தை ஜாலங்கள் மூலம் மக்களை ஏன் திசைதிருப்ப வேண்டும்? உண்மையில் நாம் கூறுவதில் தவறு இருந்தால் அதை குர்ஆன், ஹதீஸைக் கொண்டே சுட்டிக்காட்டி நம்மை நேர்வழிப்படுத்துவது இத்தகைய ஆலிம்கள் மீது கடமையல்லவா? சிந்தித்துப்பாருங்கள்! மேலும் இந்த குர்ஆன், ஹதீஸ்களையெல்லாம் மொழிப்பெயர்த்து தந்தவர்கள் யார்? ஆலிம்கள் தானே! இவர்கள் குறை கூறுபவர்களை விடவும் தேர்ச்சி பெற்ற அறிஞர்களல்லவா? குர்ஆனையோ, ஹதீஸையோ மொழிப்பெயர்ப்புகளின் மூலம் புரிந்து கொள்ள முடியாது என்றால், நம்மிடையேயுள்ள குர்ஆன் மற்றும் ஹதீஸ் கிரந்தங்களின் பொழிபெயர்ப்பின் நிலை என்ன? அறிஞர்பெருமக்கள் ஏன் பல ஆண்டுகளாக அயராது உழைத்து நமக்கு மொழிபெயர்த்து தரவேண்டும்? அவை எல்லாம் விழலுக்கிறைத்த நீரா? இத்தகைய பசப்பு வார்த்தைகளைக் கூறி மக்களை திசைதிருப்பும் இவர்களைக் குறித்து அல்லாஹ் தன் திருமறையிலே கடுமையாக எச்சரிக்கின்றான்.

"நீங்கள் அறிந்து கொண்டே உண்மையை பொய்யுடன் கலக்காதீர்கள்; உண்மையை மறைக்கவும் செய்யாதீர்கள்" (அல்குர்ஆன்: 2:42)

"நாம் அருளிய தெளிவான அத்தாட்சிகளையும், நேர்வழியையும் அதனை நாம் வேதத்தில் மனிதர்களுக்காக விளக்கி பின்னரும் - யார் மறைக்கிறார்களோ, நிச்சயமாக அவர்களை அல்லாஹ் சபிக்கிறான். மேலும், சபிப்ப(தற்கு உரிமை உடைய)வர்களும் சபிக்கிறார்கள்" (அல்குர்ஆன்: 2:159)

*'மார்க்கத்தின் மீது பொய்யை ஏற்றிச் சொல்வது தீமைகளில் மிக மோசமானதும், பொய்யின் வகைகளில் மிக கொடியதும் ஆகும். அதற்கு கூலி நரகமே' என்று நபி (ஸல்) அவர்கள் எச்சரித்தார்கள்.* அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) ஆதாரநூல்: புகாரி.

மேலும், அல்லாஹ் தன் திருமறையில் (2:160)ல் கூறி இருப்பதைப் பார்த்து, தவறை உணர்ந்து, பாவமன்னிப்பு கோரி அவனின் பொருத்தத்தை பெற்றிட வேண்டும்.

எனவே சமுதாய மக்களுக்கு மார்க்க அறிவை புகட்டி சமுதாயத்தைக் கட்டிக்காக்கும் பொறுப்பிலுள்ள சமுதாயத்தின் கண்களான உலமாபெருமக்கள் அல்லாஹ்வும், அவனது ரஸூலும்நமக்கு காட்டித்தந்த உண்மையான இஸ்லாத்தை எதற்கும், எவருக்கும் பயப்படாமல் துணிந்துக்கூறி, நாளை மறுமையில் அல்லாஹ் அளிக்கவிருக்கும் அளப்பரிய செல்வங்களைப் பெற்றிட வேண்டுகிறோம். அல்லாஹ் அவர்களுக்கு இத்தகைய ஆற்றலைத் தந்து மார்க்க சேவை செய்வதன் மூலம் ஈருலகிலும் நற்பேருகளைப் பெற வல்ல இறைவனிடம் பிரார்த்திப்போமாக!

ஆக்கம்
இஸ்லாமிய கல்வி மையம்
கூத்தாநல்லூர்